உ

சிவமயம்.



# அட்டோத்தரசதநாமாவளி.
# சிருத்தொண்டர்திருநாமக்கோவை.
# வேதகிரியீஸ்வரர்பதிகம்.
# சிவபராக்கிரமப்
# போற்றிக்கலிவெண்பா.
# திருவள்ளுவதேவர்துதி.



இவை

அஷ்டாவதானம்-பூவை,

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன

1892 ஹு.

சிவமயம்.

திருவாலவாய்த் திருவிளையாடல்

# அட்டோத்தரசத நாமாவளி

அருச்சனையகவல்.

பொன்னகர்க் கிறைபழி போக்கிய வாநம
அன்னவன்கரிப்பழி யையுந்தவிர்த்தாய் நம
கடம்பா டவிநகர் கண்டதே வேநம
உடம்பார்தடாதகையுதிக்கச்செய்தாய்நம
அங்கயற்கண்ணியையவண்மணந்தாய்நம
அங்கிர சதச்சபை யாடிய வாநம
குண்டோ தரற்கனங் கொடுத்தாண்டாய் நம
குண்டோ தனநதி கூவித்தந் தாய்நம
அலைகட லேழையு மழைத்திட்டாய்நம
மலையத் துவசனை வருவித் தாய்நம
உக்கிர குமாரனை யுதிப்பித் தாய்நம
செக்கதிர் வேல்வளை செண்டளித்தாய்நம
வேல்கடல் சுவற்றிட விடுவித் தாய்நம
கோல்வளையரிமுடி குலைவித் தாய்நம

பொன்வரைசெண்டாற் புடைபித்தாய்நம
புன்மைதீர் வேதப் பொருளுரைத்தாய்நம
குருமன் மணிமுடி குயிற்றவிற் ருய்நம
வருணன் விடுகடல் வற்றுவித் தாய்நம
கூடுநான் மாடக் கூடல்கண் டாய்நம
தேடுமெல் லாம்வல்ல சித்தனுய்நம
கல்லானை தின்னக் கரும்பளித்தாய்நம
வல்லானை யெய்தமன் மாய்வித் தாய்நம
விருத்த குமரனுய் மிளிர்பால னேநம
நிருத்த மாறி நிகழ்த்திய வாநம
அந்தண னில்பழிக் கஞ்சிய வாநம
அந்தணன் மாபா தகமடர்த் தாய்நம
சித்தன தங்கஞ் சிதைத்திட் டாய்நம
பைத்தலை நாகம் படவெய் தாய்நம
மாயப் பசுவை வதைத்திட் டாய்நம
ஏய மெய்க்காட் டிட்டதே வேநம
உலவாக் கிழியொன் றுதவிய வாநம
பலவாம் வளையல் பகர்ந்துவிற் ருய்நம
அட்டமா சித்தி யறிவித்த வாநம
சிட்டமாய் விடையிலச்சினையிட்டவாநம

பஞ்சவன்பாற்றணீர்ப்பந்தர்வைத்தாய்நம
வஞ்சமி விரச வாதஞ்செய் தாய்நம
சோழனை மடுவிற் ருலைவித் தாய்நம
கூழுறு முலவாக் கோட்டைதந் தாய்நம
அவையிடைவழக்குரை யறைமாமனேநம
சிவபதிவரகுணன் றேறச்செய் தாய்நம
இந்தன முடிமிசை யேற்றுவிற் ருய்நம
பந்தமி றிருமுகம் பதத்ரீந் தாய்நம
பாணபத் தர்க்கோர் பலகையிட் டாய்நம
மாணவர் மனையிசை வாதுயர்த்தாய்நம
பன்றிக் குருளைகள் பாலுணுயேநம
அன்றவை யமைச்சரா வருளிய வாநம
கரிக்குரு விக்குமெய் காட்டிய வாநம
தெரித்த நாரைக்குச் சிவமளித் தாய்நம
அரவினு லாலவா யாக்கிய வாநம
பிரமைகொள் சுந்தரப் பேரம்பெய்தாய்நம
பருமைச் சங்கப் பலகைதந் தாய்நம
தருமிக் குக்கிழி தந்திட்டாய்நம
கீரனைக்கரைமேற் கிட்டுவித் தாய்நம
கீரனுக் கிலக்கணங் கிளத்திய வாநம

கடைச்சங்கக்கல கந்தவிர்த் தாய்நம
இடைக்கா டன்பிணக் கிகலொழித்தாய்நம
மீதலை மேல்வலை வீசிய வாநம
வாதவூ ரார்க்குமெய் வழுத்திய வாநம
நரிபரி யாக்கிய நாயக னேநம
பரிநரி யாப்பின் பண்ணிய வாநம
பிட்டுக்கு மட்சுமை பெட்டேற் றுய்நம
சுட்டுக்க பூழியன் சுரந்தீர்த் தாய்நம
கன்னிகர் சமணரைக் கழுவேற்றினுய்நம
வன்னிகூ வல்குறி வரவழைத் தாய்நம
மூர்த்திதீர்த் தந்தல மூன்றுமுள் ளாய்நம
சீர்த்தி மலிந்த சிவநக ரோய்நம
மாவண் கடம்ப வனமுடையாய்நம
சிவன் முத்தி சேர்புரத் தாய்நம
கன்னி புரத்துறை காமாரி யேநம
அன்னநண் வயற்றிரு வாலவா யாய்நம
மகிழ்கொள் மதுரை மாநக ராய்நம
திகழ்பூ லோக சிவலோக னேநம
சமட்டி விச்சைத் தனிநக ரோய்நம
எமக்கண் கூட லெழினக ரோய்நம

துவாத சாந்தத் தொழில்பதி யோய்நம
தவாத வாதிதீர்த் தத்தாதி யேநம
பரம தீர்த்தப் பசுபதியேநம
சிரமநீக் குஞ்சிவ தீர்த் தத்தாய்நம
உயர்சிவ கங்கை யுடையவ னேநம
தீர்த்த வுத்தமத் திப்பிய னேநம
சீர்த்திடு தரும தீர்த்தத் தாய்நம
அருத்த தீர்த்தத் தறவோ னேநம
திருத்து காம தீர்த்தத் தாய்நம
தெற்று முத்தி தீர்த்தத் தாய்நம
பொற்று மரைத்தடப் புண்ணிய னேநம
தூயகற் பூர சுந்தர னேநம
வாயெழிற் கடம்ப வனசுந் தராநம
கல்யாண சுந்தரக் கடவுளே றேநம
தொல்யாணாச் சண்பக சுந்தர னேநம
அபிராம சுந்தர வைய னேநம
அபிடேக சுந்தர வபிதான னேநம
பழியஞ்சு சுந்தரப் பண்ண னேநம
சுழிபுன லாலவாய்ச் சுந்தர னேநம
அட்டாள சுந்தர ஞகிய வாநம

மட்டார் நறுமான் மதசுந்த ராநம
தூமணி மகுட சுந்தர னேநம
சோம சுந்தரச் சோதி யேநம
சித்தி விநாயகத் தேவையீன் ருய்நம
சத்திகொள் முருகனைத் தந்ததந் தாய்நம
துய்ய மீனாட்சி சுந்தர னேநம
மொய்யருள் தெட்சணா மூர்த்தி யேநம
வெம்பும் வயிரவ மெய்பூண் டாய்நம.
சம்பந்த மூர்த்தியைத் தந்தளித் தாய்நம
அந்திரு நாவுக் கரசையாண் டாய்நம
சுந்தர மூர்த்தியைச் சூழ்ந்தாண் டாய்நம
ஒண்டுயே வாத வூரர்க்கொண் டாய்நம
சண்டேசர் பூசைகொள் சங்கரா நமவே.

அருச்சனை யகவல் க0அ-ம்

முற்றிற்று.



சிவமயம்.

# திருத்தொண்டர்.

# திருநாமக்கோவை.



## கணபதிகாப்பு.

மெய்யென்பர் நாமமெல்லாம்
வெவ்வேறு போற்றிடவைங்
கையன் றிருவடியே காப்பு.



தில்லைவா ழந்தணர்கள்
சீர்நீல கண்டனு
ரில்லை யளித்த
வியற் பகையார் தொல்லை

இளையான் குடிமாறர்
மெய்ப்பொருளா ரென்று
மிளையா விறன்மிண்ட
ரின்ப மளவுமம

நீதி யெறிபத்தர்
நீண்டபுக ழேனாதி
நாதர்திருக் கண்ணப்பர்
கற்கலயர் மேதகுசீர்

மானக்கஞ் சாற னரி
வாட்டாய னாயர்
ஞானத் திருமூர்த்தி
நாயனார் மேன்மை

முருகர் பசுபதியார்
முன்னாளைப் போவார்
தூரிசி றிருக்குறிப்புத்
தொண்டர் மருவுமறைத்

சண்டேசர் வாகீசர்
தக்க குலச்சிறையார்
கொண்ட மிழலைக்
குறும்பனார் தொண்டுசெய

நீள்காரைக் காலம்மை
    யப்பூதி நீலநக்கர்
மூளு நமிநந்தி
    முத்தமிழை                    யாளுந்

திருஞான சம்பந்தர்
    செய்ய கலிக்காம
ரருண்மூலர் தண்டி
    யடிகள்                    வருமூர்க்கர்

சோமாசி மாறனர்
    சாக்கியனர் சூழாக்கூர்
நாமார் சிறப்புலியார்
    நற்செருண்டி                    னேமச்

சிறுத்தொண்டர் சேமான்
    செய்ய கணநாதர்
விறற்களந்தைக் கூற்றுவனர்
    விஞ்சைத்                    திறத்துமிகும்

பொய்யடிமை யில்லாப்
புலவர் புகழ்ச்சோழர்
மெய்கொ ணரசிங்க
முனையரைய ரையாதி

பத்தர் கலிக்கம்பர்
கலியர் பகர்சத்தி
கைத்தபுலன் ஐயடிகள்
காடவர்கோன் மெய்த்தகணம்

புல்லனூர் காரிநெடு
மாறர்புகழ் வாயிலார்
நல்ல முனையடுவார்
நாயனார் மல்குகழற்

சிங்க ரிடங்கழியார்
தஞ்சைச் செருத்துணையார்
கொங்கார் புகழ்த்துணையார்
கோட்புலியா ரங்கணார்க்குப்

பத்தராய்த் தாழ்வார்
பாமனையே பாடுவார்
சித்தத்தைச் சிவன்பாலே
சேர்த்துள்ளார் நித்தமு

முத்தி நெறிகாட்டு
முதல்வர் முழுதுணர்ந்தோர்
பித்தனுறை யாரூர்ப்
பிறந்தார்க ளத்தனையே

முப்பொழுதுந் தீண்டுவார்
முழுநீறு பூசுவா
ரப்பாலு மீச
னடிச்சார்ந்தார் மெய்ப்பூசல்

மானியார் நேசனார்
வாழ்செங்கட் சோழனார்
பான்மையார் நீலகண்டப்
பாணனார் மேன்மைச்

சடைய ரிசைஞானியிவர்
தம்மையெல்லாஞ் சேர்த்துத்

தொடையாகப் பாடியவன்
றெண்ட ரடியிணைகள்
சிந்தனைசெய் திந்தத்
திருநாமக் கோவைதனை
மந்திரமாக் கொண்டு
மயிர்சிலிர்த்து நைந்துருகி
மெய்யன்பா லென்றும்
விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவுங்
கற்பனையு மையலுந்தீர்க்
தத்து விதானந்த
வகண்டபரி பூரணத்தின்
நித்தியமா வாழ்வார்
நிசம்.

முற்றிற்று.



கணபதி துணை.



# வேதகிரியீஸ்வரர்பதிகம்.

மேருவிலாயதி ஞரைவாயொரு வெங்கணைமாலரியாய்-விரிதலையுலகந் தோயதிலுறு மிகுசகடிருசுடராய், ஆரணநாலும் பரியாயம்புய னமைவுறுசாரதியா, யதினீயுற்றிக லழியாமுப்புர மட்டிடுமந்நாளிற்; சீருறுமூவர்களழியா துன்னடி சேராநின்றனரால், சிந்தையிலுன்னை மறவாதவர்தமைத் தேருவோரெவரே காண், வேரிநறுந்தொடை மாதொருபங்குறைவெற்பேகற்பகமே- வேதகிரிப்பவ ரோகவயித்திய வேணி முடிக்கனியே. (க)

ஆயுதாந்தனி லேயும்பொழுது மைம்பேரிடாகு, மகிலத்துறுசிறுகுழவிப்

பருவத் தறியாமையினிடரா, மேயகு மாரத் திடர்காமத்தா லெழின்மனை சுத ரெனவே, யேயும்பொழியா நிரதிசயமீ து பொருளெனவருடந்தோய், வெறி யார்பாத சரோருகமென்றலைமீதுறவரு ள்புரிவாய், வேதகிரிப்பவ ரோகவயித் திய வேணிமுடிக்கணியே. (உ)

களப்படிரப் புளகக்கொங்கைக் கன் னியர்போகத்தைக், கருதிக்கருதிச் சுட ர்விட்டிலினிற் கடையேன் மடியாம, வி ளகுமனத்தோ டுனையேநாடி யிருந்திடு ங்கென்செயல்போ-யெய்லாநின்செயலா கநினைந்தென் னிருளறுநாளென்றோ,மு ளரிநகைத்திடு கண்ணற்கரசே முண்ட கனுக்கரசே, முத்திக்கரசே பத்திக்கர சே மூதறிவோர்க்கரசே, விளரிபடுத்த னி பாடிமுரன்றெழுவெறியார் பொழி

ல்சூழும், வேதகிரிப்பவ ரோகவயித்தி
ய வேணிமுடிக்கனியே, (ரு)

அளியுயிர்மேலு நின்மேலன்பு மாகந்
தனையெமனு யறியுமுவர்ப்பு நின்றிரு
ஞான மடியேனுக்கருளிப். புனிதருபழ
மு மோடும்போலப் புரைதீர் நெஞ்சின
ர்பாற், போதவிருத்தித்தீதகல்வித்துன்
பொன்னடியென்றருள்வா. யொளிதரு
மிமயா சலமுன்னுதவிய வொருமயில்க
ளிகூர, வுற்றிடுகோரே கற்றவர்சிரேயோ
துமறைக்கேறே, வெளியினில் வெளி
யே யொளியினிலொளியே மிகுசுகசாக
காமே, வேதகிரிப்பவ ரோகவயித்திய
வேணிமுடிக்கனியே, (சு)

மறையாகமமுத லெவையுந்தருமமா
தியவோதியிடு, மற்றவைதம்முளறமு
ம்பொருளும் வருகருவியவாகு, நெறி

யாகும்பி னிரணஞ்சுகமவை நிகழ்வி
டையானந்த நீடுறுசொரூபா நந்தம்மெ
னவெ நின்றிடுமவைதம்முட், பொறி
யால்விடையா நந்தத்துயர்பின் - போ
தானந்தமதே - புகருமழியா நிரதிசயமீ
துபொருளெனவருடங்தோய், வெறியா
ர்பாத சரோருகமென்லலை மீதுறவருள்
புரிவாய் - தகிரிப்பவ ரோகவயித்திவே
ணிமுடிக்கனியே. (ரு)

ஆகாராதியி னுலும்மிளுரு மங்கியி
னுறுகூறு, மவையுட்பயமொன் றகலச்
சொலுமவை யாமின்பென வெண்ணி,
யேகாதுருபயமொன்றுந் துன்பென்றெ
ணியிச் சுகதுன்பத், திடையேபடிவே
னுனையேனினையேனென் றுன்னருள்பெ
றுவேன், மோகாதிகளுறு பிறவிக்கட
லின் முடியாதுன்னருளா, மூரிக்கப்ப

விடத்தே வைத்தெனை முத்திக்கரையுய்க்கு. மீகாமனேரே ராகியவொருவர் மிகு பூரணசொருபா, வேதகிரிப்பவ ரோக வயித்தியவேணி முடிக்கனியே. (சா)

ரேகம்பூதச் சடமாமதிலே திகழ்கரணம்பொறியாற், சிறுவிடயத்தூணுண்டேசுழலுந் தீயுழிச்சிந்திடுமோல் போகம்புவனம் புறமாமிதிலே பொலிவுறு நீயாரே, புந்தியிலாதிவையானெனவென்று புலம்பித்திரிகின்ரு, யேகமதாய்மிகு சுகமாயெங்கு மிருந்திடுபூரணமா, யில குமுனைத்தொடர் பிறவியிலுற்றிட செய்தாயென்றருளி, வேகமனப்பரிகிறுவிச்சொருபம விளக்கிடுமாரியனீ, வேதகிரிப்பவ ரோகவயித்திய வேணிமுடிக் கனியே. (எ)

அகிலசராசர மெவைபுடைத் துவைபைந்தொழிலாலிவையுள் - ளானசிருட்டி யளித்தலழித்தலு மாகமதிற்சாரும்;

புகலுமறப்புந் தெளிவுற்றலுமேபொலி
வுயிரிடைசாரும் - போதமகற்றுதி ரோ
தமெனக்குப் போக்கிற்குறைபடுமோ,
பகாருமறிவா னந்தச்சுடரோ பாகதிநே
ருப்க்கும் - பண்பார்துணையே யென்பா
லமுதே பாகேமாகடலே, மிகுநெறித
வமார் தெய்வக்கங்குல் விளங்கியிருந்து
தொழும் வேதகிரிப்பவரோகவயித் தி
யவேணிமுடிக்கனியே. (அ)

தன தானியமிட மாடாடாதி தயங்கு
பொருட்சார்புந்-தருதாய்தந்தை மினூரா
தியராமச் சாருமுயிர்ச்சார்பு, மினமாஞ்
சார்புக ளிவைமேலாசையிகந்தாமை யி
னைந்து - மெழில்பெறவுட்கொண் ட
சையாதென்று மிருந்துசமாதியிலே, ம
னமார்வாதனை யறவேயென்று மதித்த
சுழுத்தியனுய் - மன்னிருளற்றுனை யெ
ன்றணைகிற்பேன் மாதவமாகடலே, மி
னலார்மேகந் தங்கிப்பொழில்வாய் வெ

ண்டாளத்துளிகால் - வேதகிரிப் பவ ரோகவயித்தியவேணிமுடிக்கனியே.

வீடென்றறைதரு சொற்குப்பொருளோ விடுதலையாதலினால் - வீக்குண்டோனுங் கட்டுண்டோனும் விளங்குந்திடமாகப், பீடுறுகட்டுத் தானய்விட்டுப் பெயராதிதுசடமாம்-பிணிப்ட்டோன்சு தந்தரானுகுமிப் பிணிபெயரச்செய்வோ,னீடுசுதந்தரமுண்டாமொருவனெனுமிவ்வேதுவினு - னிகழ்பதிபசுபா சம்மென்முப்பொருணிச்சயமென்றருளி வேடனை வெல்லுங் குருவாயெனையாள் மெய்ப்பொருணீயென்றே - வேதகிரிப் பவ ரோகவயித்திய வேணிமுடிக்கனியே. (க)

வேதகிரீயீஸ்வரர் பதிகம்

முற்றிற்று.



பரமபதிதுணை.

அஷ்டாஷ்டவிக்கிரகலீலைகளாகிய

„ சிவபராக்கிரமம். „

சிவபிரான் திருவுருக்கொண்டருளிய இலிங்கம் - இலிங்கோத்பவம், முகலிங்கம் - சதாசிவம் - மஹாசதாசிவம் - உமாமஹேஸ்வரம் - சுகாசனம், உமேசம் சோமாஸ்கந்தம் - சந்திரசேகரம் - விருஷபாந்திகம் - புஜங்கலளிதம் - புஜங்கத்ராசம்,சந்தியாநிர்த்தம் - காளிதாண்டவம் - கங்காதரம் - கங்காவிசர்ஜனம் - திரிபுராந்தகம் -கல்யாண சுந்தரம் - அர்த்தநாரீஸ்வரம் - கஜயுத்தம், சுவராபக்கம்-சார்த்தூலஹரி - பாசுபதமூர்த்தம்-கங்காளம் - கேசவார்த்தம், பிக்ஷாடனம் சிம்ஹக்னம் - சண்டேசாநுக்ரஹம்-தக்ஷிணாமூர்த்தம் - யோகதக்ஷிணாமூர்த்தம்-

வீணாதக்ஷிணாமூர்த்தம் - காலாந்தகம்காமாரி - லகுளீஸ்வரம் - பைரவம் - ஆபதோத்தாரணம், வடுகம் - க்ஷேத்ரபாலகம்-வீரபத்ரம், அகோராஸ்த்ரம்-தக்ஷயக்ஞஹதம்,கிராதம்-குருமூர்த்தம்-அஸ்வாரூடம்-கஜாந்திதம்-ஜலந்தர்வதம்-ஏகபாததிரிமூர்த்தம்-திரிமூர்த்தித்ரிபாதம் ஏகபாதமூர்த்தம்-கௌரி வரப்ரதம்-சக்கிரதாநஸ்வரூபம்-கௌரீலீலாஸமந்விதம்-விஷாப ஹரணம்-கருடாந்திகம்-பிரம்ஹசிரச்சேதம்-கூர்மசம்ஹாரம்-மஸ்சாரி-வராஹாரி-பிரார்த்தநாமூர்த்தம் - இரக்தபிக்ஷாபிரதாநம்-சிஷ்யபாவம் - என்னும் அறுபத்துநான்குஅவசரங்களாம் சுடாம்.



கணபதி துணை.

# சிவபாராக்கிரமப்
# போற்றிக்கலிவெண்பா.



## கணபதி காப்பு.

பார்வதி பாகன் பரமன் பராக்கிரமம்
தேர்கலிவெண்பாவாற்செப்பவேமேரு
விநாயகன் தந்தருளும்வேழமுகச்சித்தி
விநாயகன் காக்க விரைந்து.

திருப்பாற்கடல்கடைந்து
தெள்ளமுதமுண்ண
விருப்பாயதன்கரையை
மேவிப் - பொருப்பாகும்

மந்தரமேமத்தாக
வாசுகியேநாணாகச்
சந்திரனையேயடையாத்
தானமைத்து - வந்திமுக்கும்

மாலயனுமிந்திரனும்
வானவருந்தானவரும்
வேலைவிடங்கண்டு
வெருண்டோடி - ஓலமிட்

டெங்கள்பிரானே
இதுசமையமென்றிரக்க
அங்கவரைக்காக்க
அருள்சுரந்து - செங்கையினால்

ஆலத்தைவாங்கியதை
ஆபோசனமாக்கி
ஞாலத்தைக்காத்த
நலம்போற்றி - பாலற்கா

வந்தெதிர்த்தவந்தகனை
மார்பிலுறவுதைத்த
கந்தமலர்போலுங்
கழல்போற்றி - நந்தணிந்த

சிங்கத்தைச்கம்புளர்ய்ச்
சென்றுரித்துத்தேடரிய
அங்கத்தணிந்த
அருள்போற்றி - மங்கைக்குத்

தந்தையென்றதக்கன்
தலைக்குத்தகர்த்தலையை
விந்தையுறவைத்த
விறல்போற்றி - ஐந்துமலர்க்

கன்னற்சிலைவேளைக்
கண்ணாலெரித்திரதி
தன்னையுங்காத்த
சாயம்போற்றி - ஒன்னலர்சேர்

இஞ்சியொருமூன்று
மிமைக்குமுன்னமேயெரியப்
புன்சிறிப்புக்கொண்ட
புகழ்போற்றி - செஞ்சாணப்

போதுற்றசக்கரத்தால்
பொங்குசலந்தரனைக்
சேதித்துவென்ற
திறல்போற்றி - வேதங்கள்

நாலுமொருதேராக
நல்லவுபனிடதம்
கோலின்வழிசெல்
குராக்தமாச் - சேலனைய

கண்ணுமையாள்சாதியாக்
கையிற்பிரணவந்தான்
எண்ணரியமத்திகையா
எய்தவே - கண்ணும்

தருகாலசக்கரமே
சாபமாமாயை
இகல்நாணுப்பாசுபதம்
ஏற்றிச் - சகம்புகழ

அண்டரையெல்லாம்
அடரும்பகாட்சனையே
உண்டகணையின்
உரம்போற்றி - வண்டறைதார்

மாயனயன்வானோரை
வாட்டுமந்தகாசுரனைப்
பாயுமொருசூலப்
படைபோற்றி - மாயைப்பால்

விண்டலமுமண்டலமும்
வீட்டும்முஷ்டிகாசுரனைத்
தண்டஞ்செய்திட்ட
சயம்போற்றி - மண்டுகதிர்

வீசுமொருதண்மதியை
வீறடக்கியோர்கலையை
வாசமுடிமீதணிந்த
மாண்போற்றி - பாசமெல்லாம்

உற்றபசுவாகுமயன்
ஒண்பதிநானென்றநடு
ஒற்றைமுடிகிள்ளும்
உகிர்போற்றி - முற்றுதவ

நற்றாருகாவனம்வாழ்
நான்மறைதேர்மாதவர்தம்
சிற்றிடையார்கற்பைச்
சிதைத்தவுடன் - செற்றமிகும்

சிட்டரெலாம்வேள்விசெய்து
சீறுசார்த்தூலமுதல்
விட்டவெலாங்கொட்டணிந்த
மெய்போற்றி - வட்டமுறும்

அண்டமொருமூவா
யிரத்துக்கரசாகி
மண்டுசமர்செய்து
வரும்வேலை - கொண்டணிற

மூவாயிரமாலும்
மூவாயிரமயனும்
மூவாயிரமாகவ
னும்முதலா - ஓவாமல்

எண்ணரியகோடி
இமையோர்களேவல்செய்தே
அண்ணலெனவேயிரங்க
ஆங்கறிந்து - மண்ணிலொரு

பூமனுக்குநல்ல
புதல்வனெனப்பூங்கடப்பார்
தாமனேதம்பியெனச்
சார்ந்துவரக் - கோமுறைசெய்

நீராசசேகரனுய்
நேருமக்கிரேசுரனைக்
கூர்வேலாற்கொன்ற
கொலைபோற்றி - சீர்வேள்வி

வேந்தாகுமிந்திரனை
வீட்டியடர்ந்துவரும்
சார்ந்தாசுரனைவென்ற
தாள்போற்றி - பார்தண்மேல்

கண்ணுறங்குமச்சத்தைக்
கண்ணைப்பறித்தணிந்து
விண்ணுலகைக்காத்த
மிடல்போற்றி - கண்ணனயன்

உண்டானதேவரெல்லாம்
ஓடவுருத்தெழுந்த
தண்டாசுரனைவென்ற
சால்போற்றி - வண்டாடும்

தண்டாமரையோனைத்
தாக்கியடர்ந்துவரு
முண்டாசுரனைவென்ற [லாம்
மொய் போற்றி - அண்டமெல்

தூளாகப்பாயுஞ்சார்த்
தூலனுயிர்ப்படங்க
வாளாலரிந்த
மறம்போற்றி - மீளாமல்

வானோர்குழாம்பணிய
மாலயனுமிந்திரனும்
தானேயரியா
சனஞ்சுமப்ப - மாநிலத்தில்

ஒன்னார்களில்லையென
உத்தாமாச்சென்றேறிப்
பொன்னாரும்வெள்ளிப்
பொருப்பெய்தி - எந்நாளும்

மாதவங்கள்செய்வோரை
வாட்டவவரோடியுள்ளே
காதவோவென்றென்றே
நண்ணவே - பூதபதி

காதுளான்காதிலான்
　　போர்லக்கனிந்திருப்ப
மாதுமையாள்போர்செய்ய
　　வாய்மலர - நாதன்

விடைகொடுத்தபோது
　　வெகுகோடிதேரும்
குடையுமிடபக்
　　கொடியும் - கடலெனவே

பூதக்குழாமும்
　　பொருவீரபத்திரரும்
நாதனருள்சித்தி
　　விநாயகனும் - வேதப்

பொருளுரைத்தவேலவனும்
　　பூவுலகங்காக்கும்
அரிகரபுத்திரனும்
　　ஆங்கே - வரைவரைபோல்

நீலிகளுங்கூளிகளும்
நீலவயிரவரும்
சூலியுமையாடேரைச்
சூழ்ந்துவர - ஆலமெனச்

சீறிச்சினத்தசுர
சேனையையெல்லாமடர்ந்து
நூறிவரும்போதவுணன்
நோக்கியே - ஈறிலா

ஆனைமுகனை
அறுமுகனையம்பிகையைச்
சேனையொடுவென்ற
திறலறிந்து - ஞானமைச்

சேவேறியம்பிகைமுன்
சென்றவுடனுங்கவளும்
பூவாலருச்சித்துப்
போற்றிசெய - ஓவாத

குன்றமெனநின்ற
குடாசுரனைச்சூலத்தால்
வென்றகருணை
விறல்போற்றி - கன்றெறிந்த

மாலயனைவானவரை
வாட்டுமனலாசுரனைக்
கோலநுதற்கண்வைத்த
கோள்போற்றி - ஆலமென

மூண்டடருங்கோட்டு
முகாசுரனைமுற்றுவித்த
நீண்டதொருசூலத்தி
னேர்போற்றி - நீண்டகையால்

வானவரையெல்லாம்
வருத்துங்கயாசுரனைத்
தானுரித்துப்போர்த்த
சயம்போற்றி - மானமிகும்

தூராசுரனைத்
தொலைத்தபடைபோற்றி
கோராசுரனையடு
கோள்போற்றி - சீராரும்

இந்திரனைவானவரை
யெல்லாம்பிடித்தடரும்
துந்துபியைவென்ற
துடிபோற்றி - வந்துவந்து

பாட்டளிகள்சூழ்ந்திசைசெய்
பங்கயனைவென்றபஞ்ச
மேட்டானைவென்ற
வியன்போற்றி - நாட்டமாய்

மேவும்வலாசுரனை
வென்றவிசயம்போற்றி
பூவுலகையுண்டுந்தி
பூத்தவன்போல் - ஓவாமல்

நின்றெதிர்த்துவந்த
நிதனுசுரனுயிரை
வென்றகணையின்
விறல்போற்றி - மன்றலுறு

மாதுளபமாலையணி
மாலுடனேமூன்றுநாள்
வாதுசெய்துபோர்க்களத்தில்
மாயாதே - மீதடரும்

வெய்யமிருகாசுரனை
வென்றுவிறல்பூண்ட
கையிலணிவேலின்
கறைபோற்றி - மையலுறு

தக்கனைப்போலோர்வேள்வி
தான்செய்யத்தேவரெல்லாம்
மிக்கவவியுண்ணவந்த
வேலையின்கண் - அக்கணமே

விண்டலமேதோாக
மேதினியேவண்டிலெனக்
கொண்டிழுக்கும்வாயு
குரகதமாய் - மண்டு

அனலேசிலையாக
அம்புலியேநாணுப்
புனலேயடுசாமாப்
பூட்டிச் - சினவடிவேல்

சேனுபதிதானே
தேர்கடவிச்செல்பொழுதின்
வானேர்கள்கண்டு
மருண்டோட - வானுத

இந்திரனைமாலயனை
ஈராறுசூரியரைச்
சந்திரனைமாதவரைத்
தூக்கியே - வெந்திறல்சேர்

அந்தமகமும்
அடர்ந்துவருஞ்சத்த
தந்துவையும்வென்ற
தகைபோற்றி - வந்தெதிர்க்கும்

எண்டிசையோர்கள்
இமையோர்கள்யாவரையும்
அண்டப்பிடித்தடித்து
வந்தவுடன் - அண்டரொடு

கட்டிக்குலிசனையே
கால்யாப்புச்செய்துவைத்து
விட்டேவல்கொல்வதெல்லாம்
விண்டறிந்து - கிட்டியே

வீரமிகுமவுணன்
மீதுவெகுகாலம்
போர்புரிந்தேயஞ்சிப்
புறங்கொடுத்துச் - சீர்திகழும்

மந்திரத்தாற்பூசிக்க
வச்சிரகேசியைச்
செந்தழற்கணுலெரித்த
சீர்போற்றி - அந்தணான்றன்

பாதாதிகேச
மனைத்தினும்பாயுஞ்சர்வ
பூதாசிரனையுண்ட
போர்போற்றி - வாதாடி

மாதவர்க்காப்பாற்கடலில்
வந்தவிகலாசுரனைக்
காதிக்கிழித்ததடக்
கைபோற்றி - வேதன்பால்

மிக்கவரம்பெற்றுவலி
மேவுகாளாசுரனை
உக்கிரமாய்வென்ற
உரம்போற்றி - தர்க்கமிடும்

வானோர்கள்காயமெல்லாம்
மாயையால்வந்தொழித்தே
ஊனோடுசுக்கிலங்கள்
உள்ளவெல்லாந் - தானாக

உண்டபாண்டாசுரனை
ஓர்வேள்வியால்வீட்டி
அண்டரைக்காத்த
அருள்போற்றி - விண்டயனை

வாசுகியைவென்றடர்ந்து
வந்தநாகாசுரனைத்
தேசுபெறமிதித்த
சீர்போற்றி - கேசவன்றான்

நீடுமொருசூகரமாய்
நின்றெதிர்த்துச்சண்டைசெய்ய
வேடுருவாய்க்கோடணிந்த
மெய்போற்றி - கோடேந்து

விண்டென்னுங்கூர்மத்தை
வீட்டியதன்கூட்டைச்
கண்டிகையாப்பூண்ட
களம்போற்றி - விண்டலத்தை

வேண்டியவளர்ந்ததிரு
விக்கிரமன்வெங்கொலும்பை
நீண்டகதையென்றெடுத்த
நேர்போற்றி - தாண்டுமயில்

வேலாயுதனும்
விநாயகனும்வேண்டவந்து
சூலாசுரனைவென்ற
சூழ்போற்றி - வாலையெனும்

அந்தரிக்காவந்நாள்
அலாசுரனைக்கொன்றுசமர்
சிந்திடச்செய்த
செயல்போற்றி - சுந்தரமாம்

பிச்சாடனராகிப்
பேருலகெல்லாமளந்த
பச்சைமால்பக்கம்
பலியிரக்க - இச்சையாய்த்

தேடிவருங்கால்விசுவ்
சேனனையேசிறியடு
நீடியதோர்சூல
நிணம்போற்றி - ஏடடரு

மாமலரோனுக்காக
மாவீரருத்திரராய்த்
தீமைவிக்கினேசந்திரத்தைச்
சீறியே - சேமத்தால்

வந்ததிதளாசுரனை
வாட்டியுயிர்மாற்றிவிண்ணோர்க்
கந்தரத்தையீந்த
அருள்போற்றி - முந்துசமர்

வீறுசுந்தராசுரனை
வெவ்வழற்கண்ணலெரித்த
மாறிற்பெருமை
வலிபோற்றி - மீறியே

மட்டுப்படாமல்
வரும்யோகினிகணங்கள்
எட்டெட்டுக்கோடிகளெல்லா
மெதிர்த்து - கிட்டுமுன்னே

சங்கரித்தபோது
சதுமுகன்மால்வானோர்கள்
சங்கரனென்னுஞ்
சயம்போற்றி - கொங்கலரும்

மன்றுளேகாளியுடன்
வாதுசெய்து நின்றாடி
வென்றநடன
விதம்போற்றி - குன்றமென

வந்தவெந்திராசுரனை
வன்னிவிழியானூறி
அந்தரத்தைக்காத்த
அருளினால் - இந்திரனும்

மாதவனும்போதயனும்
வாழ்த்திவயித்திய
நாதரென்றுபோற்றும்
நலம்போற்றி - சீதமிகுங்

கங்கைபொருத
கனலுருவாய்வந்துவிட
சிங்குவையுண்ட
திறல்போற்றி - துங்கமுறும்

எண்டிசையோர்வேண்ட
இலாங்கலக்கினசுரனை
மண்டியடர்ந்த
மறம்போற்றி - மண்டுவலி

தோன்றுமபமார்வன்
துள்ளிவாவேமுதுகில்
ஊன்றியதாளின்
உரம்போற்றி - மூன்றுலகும்

துன்றுபஞ்சபூதா
சுரனைமகபதியாய்க்
கொன்றவொருவச்சிரத்தின்
கோள்போற்றி - நன்றியுறு

மந்திரத்தையுன்னித்துன்
மந்திரனைக்கொன்றுநல்ல
மந்திரவெக்கிஞ்சனொனு
மாண்போற்றி - தந்தி

நிணங்கமழும்ருத்திரராய்
நின்றுபிரேத
கணங்களைபட்ட
களத்தில் - மணங்கமழும்

திவ்வியமங்களமூர்த்தி
யெனறுதேவருரை
திவ்வியநாமத்
திறல்போற்றி-வெவ்விடம்போல்

துன்னிவரும்வீமா
சுரனையேகொன்றபிர
சன்னரெனுநாமச்
சயம்போற்றி - மன்னியடர்

மாவீரமாகி
வருசுவாலாசுரனைப்
பூவாளியைப்போல்
பொடியாக்கித் - தாவாத

சித்தியெல்லாமைங்கரற்குத்
தேற்றுவித்துத்திவ்விய
சித்தரென்றநாமத்
திறம்போற்றி - மத்த

மகிடாசுரனைவென்று
வானோரையெல்லாம்
வெகுமோகஞ்செய்யும்
விருப்பால் - வெகுகோடி

மன்மதசுந்தரமூர்த்தி
யென்றுவான்போற்றுஞ்
சின்மயநாமத்
திறல்போற்றி - வன்மையிகல்

கூறுசுராசுரனைக்
கொன்றானென்றொருபேர்
தேறவிரித்த
திறம்போற்றி - ஈறில்லாப்

பூதபதியாகப்
போரிற்புலிமுகனைக்
காதியுரித்த
கரம்போற்றி - நாதமுற

அண்டத்தோடண்டம்
அடித்தடித்துப்போர்புரியுங்
கண்டகவீராக்கிர
கண்ணியனை - உண்டதனுல்

வானேரெல்லாங்கூடி
வந்திமவாசியென்று
தாஞெருபேர்வைத்த
சயம்போற்றி - வானவர்மேல்

கோரமாயண்டக்
குவடுகுலுங்கவரும்
வீரமார்த்தாண்டனுயிர்
வீட்டியே - பார்முழுதுப்

எத்திசையும்போற்ற
இமையோர்க்கருள்வீர
பத்திராய்வந்த
பதம்போற்றி - சித்திரமாய்

மற்பொருபூதாசுரனை
மாற்றிவெகுகோடி
அற்புதரான
அடல்போற்றி - பற்பலவாய்த்

தாவுபசாசுரனைச்
சாடியிடுசோம
தேவரென்றநாமத்
திறல்போற்றி - தேவியுடன்

வந்தெதிர்த்துவில்வளைத்து
மாதுமையாள்விட்டசரம்
சிந்திடவென்று
செயங்கொண்டு - தந்திரஞ்சேர்

கோதண்டதீட்சா
குருவென்றுகொண்டாடி

கோதண்டபாணிபுகழ்
கோள்போற்றி - வேதண்ட

மாமேருவில்லா
வளைத்தோன்பராக்கிரமம்
நாமமறுபத்து
நான்கினையும் - தாமமுற

நீற்றிநெடுகண்டிபுனை
நேசமிகுமாதவர்க்குச்
சாற்றும்வியாசனிரு
தாள்போற்றி - சாற்றரிய

ஆலவாய்தன்னில்
அமர்ந்துசெயுமாறுபத்து
நாலுவிளையாட்டி
னலம்போற்றி - மூலமறை

போற்றுங்கயிலைமலை
போற்றிமதுரைநகர்
போற்றிசிவன்
செஞ்சரணப்போது.

சிவபராக்கிரமப்

போற்றிக்கலிவெண்பா.

முற்றிற்று.





# திருமயிலைத்.

## திருவள்ளுவ தேவர் துதி.



சீர்கொள்சிரமேற் சுகழிகைச்சேர் தெய்வ ப்புலவன்கழல்சரணந், திரிபுண்டரஞ்சார்ந் திலகுநுதற்செங்காப்போதன் கழல்சரணந், திகழுவடிந்ததிருச்செவியெந் தேவன்கமலக் கழல்சரணஞ், சிறந்தமுகத்திலருளோக்கஞ் செய்வோன் செம்பொற்கழல்சரணந், தார் கொளுலகுக மகிழ்விக்குந்தாடியழகன்றாள்ச ரணஞ், சார்ந்தமௌனமுத்திரைக்கைத் த ருமக்கடலோன்றாள்சரணந், தரித்தசெபமா லிகையாலென் றனக்கின்பளித்தோன்றாள் சரணஞ், சங்கப்புலவர்தலைக்கணியாந் தமிழ் வேதத்தோன்றாள்சரணம், பேர்கொள்யோக ப்பட்டிகைதோள் பிறங்கும்பெரியோன்பத ஞ்சரணம் பேசுமறைக்கோவணக்கீளெம்பெ ருமானருமைப்பதஞ்சரணம், பெற்றகமலத் தவிசமர்ந்த பிரமஞானன்பதஞ்சரணம், பே தாபேதங்கடந்தென் றும்பிறவாநெறியென்ப

தஞ்சரணம், தேர்கொள்வீதித்திருமயிலைச்சி வன்முத்தனடிசரணஞ், செப்புமறிவானந்த மெனுந் தேனீந்தருள்வோ னடிசரணஞ், சி த்தைத்தரிசித்திடக்காட்டுஞ் சிவதேசிகன் றனடிசரணந். திருவள்ளுவனுமொருநாமதே யனருட்சேவடிசரணம்.

சற்குருவே துணை.

